உ

சிவமயம்.

# திருச்செந்தூர்

## முருகன் புகழ் கீர்த்தனம்.

பக்திரஸமான துதி.

இஃது

ஸ்ரீவில்லிபுத்தூர் டிஸ்டிரிக்ட்டு முன்சீப் கோர்ட்டு

அமீனா.

என். எஸ். நவநீதகிருஷ்ணய்யரவர்களால்

இயற்றப்பெற்று



மதுரை புதுமண்டபம் புஸ்தகஷாப்

**S. முத்தையபிள்ளையவர்களால்**

சுத்தப்பிரதியாய்

மதுரை

ஸ்ரீ சாரதாம்பாள் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.

1912.



விலை அணா 1 பை 6.

உ

சிவமயம்.

# திருச்செந்தூர் முருகன் புகழ்

## கீர்த்தனம்.

பக்திரஸமான துதி.



இஃது

ஸ்ரீவில்லிபுத்தூர் டிஸ்டிரிகட்டு முன்சிப்பு கோர்ட்டு

அமீனா.

என். எஸ். நவநீதகிருஷ்ணய்யரவர்களால்

இயற்றப்பெற்று



மதுரை புதுமண்டபம் புஸ்தகஷாப்

**S. முத்தையபிள்ளையவர்களால்**

சுத்தப்பிரதியாய்

மதுரை.

ஸ்ரீ சாரதாம்பாள் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.

1912.

உ

சிவமயம்.

# முருகன் புகழ் கீர்த்தனம்.

திருநெல்வேலி ஜில்லா.

திருச்செந்தூரி லவதரித்திலகும் கலியுகவரத

ஸ்ரீ சிவசுப்ரமண்யக்கடவுள்

பாதாரவிந்தத்தருள் பிரஸாதத்தால்

மேற்கூறிய ஜில்லா தென்காசித் தாலூகா

கடையநல்லூர் சரகந் திருமலைக் கொழுந்துபுரங் கிராமம்.

மகா-ள-ள-ஸ்ரீ நைஷதஞ் சிவராமகிஷ்ணையரவர்கள் கனிஷ்ட

குமாரனும் இராமநாதபுரம் ஜில்லா ஸ்ரீவில்லிபுத்தூர்

டிஸ்டிரிக்ட்டு முன்சீப்க் கோர்ட்டு அமீனுவுமாகிய

என். எஸ். நவநீதகிஷ்ணையர் பாடியியற்றிய

இப் புகழ் பஜனக் கீர்த்தனத்தை

ஸ்ரீவில்லிபுத்தூர் முன்சீப் கோர்ட்டில் பிராக்ட்டீஸ் செய்து

வருகிற முதலாவது கிரேட் பிளீடர்

மகா-ள-ள-ஸ்ரீ எஸ். எம். தையல்பாகம் பிள்ளை அவர்களால்

ஒப்பிடப்பெற்றது.

ஷை யாரவர்களால் இயற்றிய

## சாற்றுக்கவி.

### வெண்பா.

முருகன் புகழ் பதத்தை முப்போதுஞ் சாற்றிப்
பெருகன் பெழிதாகப் பெற்றுன்—றருகமழும்
பொன்னுலகும் போற்றும் புதுவைப்பதிப்புலமை
மன்னும் நவநீத கிஷ்ணன்மால்,

இங்ஙனம்

எஸ். எம். தையல்பாகம் பிள்ளை.



உ

சிவமயம்.



# முருகன் புகழ் கீர்த்தனம்.



## விநாயகர் துதி.

கோச்சைக்களிப்பா.

சீராணை முகத்தழகா சிங்காரக் கொம்பழகா
பாரிலிசை கொண்டழகா பருத்தவயி ரொத்தழகா
சேருமைந்து கையழகா செந்திலன்புகழ்பாட
காரிலகு மெய்யழகுக் கணபதியே காப்பாமே.

## சரஸ்வதி துதி.

கோச்சைக்களிப்பா.

வெண்கலையும் வைரமுத்து வெண்பணிகளோடிலகும்
கண்மணிசீர் கார்குழலே கல்விக்கடலாளே
மண்படியில் கீர்த்திமிக மகிழ்ந்து முழங்கப்பெற்ற
சண்முகன்றுதிபாட சரஸ்வதியே காப்பாமே.



இராகம்...நாதநாமக்கிரியை—தாளம்...சாப்பு.

பல்லவி.

மனமே குகனைப்பணி தினமே (வோ-மன

## அநுபல்லவி.

மிக கனமுமிசையருள் தனமளித்திடுந்
தொனிகனைத்துய்ய நினைவுடன் (வோ-மன

## சரணம்.

1. வேலனை தாஸனுக்கனுகூலனை
பரிபாலனை ஸந்ததமனக் கோலனை
மறை மூலனை தயசீலனை ஜெகஜாலனை வள்ளிலீலனை (வோ-மன

2. கந்தனை பரிமளா சுகந்தனை
சிந்தனை தீர்த்திடும் வுமை மைந்தனை
அரவிந்தனை சுரர்ஸொந்தனை பிரபந்தனை ஆனந்தனை (வோ-மன

3. சூரனை வதைத்த வதிதீரனை
மயூரனை தாஸனுக் குபகாரனை
ஓங்காரனை சங்காரனை சிங்காரனை வொய்யாரனை (வோ-மன

4. நீதனை அருமைச் செந்தில் நாதனை
விநோதனை வள்ளி தேவி ஸமேதனை
மறைபோதனை பொற்பாதனை யிங்கீதனை ஸங்கீதனை (வோ-மன

5. மாயனை நவநீதன் ஸகாயனை
ஞாயனை கருணை மனத்தூயனை
மதுவாயனை முனிநேயனை முருகேயனை கைலாயனை (வோ-மன

## விருத்தம்.

1. வள்ளியே கருமேகத் தோகையாளே
வான்குயிலே தேடரிது வர்னக் கிளியே
தெள்ளு தினைமாவும் தேனும் ஞான
தேசிகனுக்கமுதளித்த யிளமாமயிலே
வள்ளலாங் கீர்த்தி பெற்றறுமாமுகனை
வணங்கி புகழ் செப்புமெனக் கிரங்கவேண்டி
பள்ளிதனிலுனைக்கூடும் நாதன் குகனுர்
பனிரண்டி லொரு காதுட் பகருவாயே.

2. இந்திரனார் குமரி தெய்வானை மாதே
யீராறுகண் கரனுக்குகந்த தேவி
சுந்தரி சிரன்னநடைப்பவழக்கொடியே
சுயரவிதன்மேனி யதைப்பழிக்கும் வடிவே
அந்தரங்க முள்ளமர்ந்தபல வென்கவலை
அடியேனைவிட்டேகக்கருணை கூர்ந்து
தந்திர மாயனை மருவுங்கந்தன் காதுள்த்
தைக்கவே வுரைத்திடுவாய் தாய்நீதானே.

3. சீரேறுஞ் செந்தில்வளர் கந்தநாதா
சிவகுருவே பரஞானச்சுடர் மாமணியே
பாரேறுங்கீர்த்தி கொண்டறுமாமுகவா
பாவைகுற வள்ளி தெய்வானை ரமணா
நீரேறுங் கார்மேனி வண்ணன்மருகா
நிர்மல பொற்காந்தி திருபன்னீர் புயனே
மாரேறுந்துய்ய வெண்மலர் தாரணியும்
மங்களனே நவநீதன் யெனையாள்வாயே,

4. அண்டர்களினிடாகற்றக் கருணையோடு
அவதரித்துமசுரர் குலமறுத்ததீரா
எண்டிசையுஞ் செங்கோலைச் செலுத்தும் நீதா
யேழை யென்மனதிலிசைகுடி கொண்டோனே
தொண்டனெனைச்சூழ்ந்தமிடிருணபந்தத்தைத்
தோணியதை நீக்கி பரிபாலித்தாள
விண்டிடு மென்பண்டு வினைத்தீதறுப்பாய்
விமலனே நின்றுணை கைப்பற்றினேனே.

5. ஈசா நின் னருளுதவி பெறவே நாடி
யீரைந்து வைகாசி விசாகம் நாளில்
நேசமதி காசையோ டோடி வந்துன்
நேம னென் முறைமனமே யுணர்ந்த நாதா

தாஸ னென் மீதிரங்கத்தடை தானேதோ
தற்பரனே வுனையன்றி கெதி வேறுளதோ
மாசிலா மணிமயனே தயனே யெந்தன்
மைந்தனும் லெட்சுமணனைக் கண்பார்ப்பாயே.

6. அலைகடலினருகிலுறும் வடிவேலோனே
அகிலமுள்ளடியார்க்குச் செயல் பெருக்கும்
இலைநீறின் மகிமையதைச் சிறுவனென்னால்
யியம்பிவரப்பாக்கியமே போதாதேகாண்
மலையாமலென்குறையைத் தீர்த்துப்பேண
மாமுருகா யெழிபேனைக் கைவிடாதே
நிலையாக வென்புதல்வன் சிவராமன்முன்
நின்றுதுணை புரிந்திடுவாய் கருணாகரனே.

7. கந்தாநின்றிருமேனி காண்போர் மார்பில்
கஸ்தூரி புனுகு மணச்சவ்வாதோடு
சந்தண மிட்டிலை நீர்மலருங்கையில்
சங்கிலமர்தீர்த்தமுந்தான் கருணை கூர்ந்து
தந்தனுப்பு மங்களனே தாஸனெந்தன்
ரோகமதைத்தீர்த்திடுவதுந்தன் பாரம்
சுந்தரனேதரள மதிவதன யெந்தன்
சுதனான அரிகரனுக்கருள் செய்வாயே.

8. பாரையோரடிக்களந்த மாயோன் மருகா
பரிமளானந்த பொற்பாதாவுந்தன்
பேரையேதாரகமாய்ப்புலம்பு மெந்தன்
பெருந்துயரபந்தருணம் நீக்காவிடில் யான்
யாரையினிப்பிடிப்பேனவ்வகையுமறியேன்
யாதுடனே புணர்ந்தாலுன் பாரங்காணும்.
தீரையாவென் சேயன் ராமன் குறையைத்
தீர்க்கமோடவன்றுணையாய் நின்றருள்வாசே

9. புள்ளிமயில் மீதேறுங்களையுல்லாஸா
புவியாளும் புண்ணியனேயகண்ட பூர்ண
வள்ளலாமுன் செயலை யறிவாரெவரோ
வானோர்கள்மதிக்கமுடியெட்டாப் பொருளே
கொள்ளிப தேள்க்கடிவிடம்போல் கிரகபீடை
கொய்திடுவதுன்கடமைதானே நாதா
வள்ளி தெய்வானை மணவாளா வேகம்
வரமளித்தாதரிப்பாய் வடிவேலோனே.



ராகம்...கமாசு—தாளம்...சாப்பு.

பல்லவி.

ஸாமி ஸற்குரு சரவணபவகுகனே சண்முகனே சுகனே (ஸாமி)

அநுபல்லவி.

சிவகாமியருள் சுதனே கருணாகரசிவ (ஸாமி)

சரணம்.

1. அந்த மிகுந்ததாஞ் செந்திலுறைந்தரு
அற்புதமானந்தனே கந்தனே.
அரவிந்தம் பணிந்தினி செந்தமிழ் பதம்பாடும்
விப்பரன் நவநீதன் (ஸாமி.)

2. நித்தியமானந்ததத்துவமயசுய நிதிஞான மூலாதியே
சோதியே
தவசித்தர் முனிவர் மனம் பற்றி யுலாவிடுஞ்
சின்மயமும்மய (ஸாமி)

3. கற்பகத்தருவளர் அற்புத சுரர்பதி
கருணாகார்த்திகேயா தூயா

ஞானதற்பரமானந்த பொற்பதத்தறுமுக
தயதுணசிவகுரு (ஸாமி)

4 வாமன கூர்மனும் நாமமுமீரைந்து
வடிவெடுத்தோன்மருகா முருகா
ஸதாபூமணக் கோலிளை மாமணிக் குறக்குலப்
பூவையாள்மணவாளா. (ஸாமி)

5. புவிமறைநூல் தொழுந்தவள மெய்மேனி நீ
பூரணதயசீலா வேலா
திரள் நவமணியணி யெழில் பவனியுல்லாஸ
வேள் நடை யலங்கார துரை (ஸாமி)



## முடுகு விருத்தம்

1. சிருமிகுர் தேறுஞ் செந்தூரி லமராறுமுகதீர தயவாரி முருகா வீரரும் விகார மிககோர மகாசூரர்களின் மாருபடக் கிரியோனே பாரிலதி தோரணியர் நாரியிரு பாரியரைச் சேருமணவாளையனே நேரிலுனைக் கோரிபுகழ்கூறுங் குமாரனென் பேரும் நவநீதகிஷ்ணன்

2. அத்திமுக மத்தகப ருத்தவயி ரொத்ததிரு சித்திகணநாத னிளையா, முத்து நவரத்தின மிழைத்துப் பதித்த பரி சுத்தமணிக்குற்ற மார்பா, சித்தர் தவமுத்தருந் துதித்திடு மகுத்துவமிகுத்த சிவசத்தி வேலா, உத்தமபதத்தருளை நத்தியனுநித்தமுறை கத்துமென்குற்றம் பொறுப்பாய்.

3. பங்கை முகத் தங்க மெய் யங்கங் குவி கொங்கை யிருமங்கையுடன் பொங்கும் ரமணா, கெங்கை வெண் டிங்களுந் தொங்குஞ் சடைதங்குஞ்சிவ சங்கரேசன் புதல்வனே, குங்கும நிரங்களப செங்கைசுப மங்களதி சிங்கார வடிவேலனே, இங்கங்கு மெங்குமே முழங்கும் ஜெயதுங்கா ருணச் சங்கடமகற்றுவாயே.

4. ஸந்தத மகிழ்ந்துலவும் விந்தையன னந்தவதி சுந்தரமுகுந்தன் மருகா, கந்துக மிசைந்ததிரு கந்த வேளுநந்த னரவிந்தம் பணிந்து புகழும், எந்தனுள் ளந்தரங்கந் தனிலமர்ந்தும் மகிழ்ந்தும் விளையாடு மயிலா, முந்திவினை பந்தருணை மெந்தனைப் பிறிந்திட ருளிந்த நிதி தந்துதவுவாய்.



5. ஆதியுமனாதி புவிகியாதி பரஞ்சோதி யொளிமாது தெய்வானை பதியே, மேதினி விபூதிமய வேதியர்க ளோதுமறை நாதவிநோத மாயா, கீதநெறி வாதமுறை ஸாதகநற் போதக நின்னாதரவென் மீதமர்ந்தென், தீதும்ருண வாதைபரி சோதனையும் போதும் நிதி நீ தருகுவாயே குகனே.

6. நாலுமறை நூலாறும் ஞாலம் விசாலதவ மேலுலகர் போற்றுஞ் செயலா, தூலஜெகஜால பரிபால தபசீலவதி லீலா விநோதலோலா, ஓலமிடுங்கால னெமக்கோலன் றிருசூலமுடன் பாலனெனை யணுகாமலே, மாலிலகும் வாலகுரு மூலானு கூலந்தர நீலமயிலேறி வருவாய்

இராகம்...தன்யாசி—தாளம்...சாப்பு.



பல்லவி.

எனக்கும் நிதியினி தொனிக்கத் தந்தருள்வாய் கமுகாசலீசனே (என

அநுபல்லவி.

வனக்குறத் தையல் தனக்குகந் தின்ப
மனக்களிப்புடை யனுக்கிரகனே (என

சரணம்.



1. ஆதியேபரஞ் சோதிமயவி
நோதவேள்மய நாதனின்றிரு
பாதமேற்றுதி வோதிடும் நவ
நீதனென்றனை ஸாத கையனே (என

2. செங்கைமழுவுண்டன் தொங்குஞ் செஞ்சடை
திங்களும்முடி தங்கியிலகிய
சங்கரேச ரங்கமுடன் வளர்
மங்கையுமையின் துங்கசுதனே. (என

3. வீரமானதி தீரகோரவீ
காரசூரரைக் கிறியவர்படை
யோரின் குலமறகாய மோடணை
லாறுபொரியாகிப் பாரிலுதித்தவா. (என

4. மெத்தவே வரம் பெற்றவதிவீர
பத்துமுடிதீர கொத்துயிருபது
வெற்றிக் கரங்கொண்ட சத்தியிலங்கனைக்
கொத்தி மாளவதைத்தோன் மருகா. (என

5. நாலுமாமறை நூலுமாறுக்கு
மூலனும் பரிபாலமா மாமுனி
கோலஞான விசாலனுந்தய
சீலதாஸனுகூல முருகா. (என



## சந்த விருத்தம்.

### தாளம்—சாப்பு.

1. பொன்னுலாவுந் திருச்செந்தூர்வாழ்ஞான
போதஸற்குருநாத விநோதனே
மின்னல் போன்றொளி வீசும் பிரகாசனே
மிக்கமாமுனி யோகியர் நேசனே
பன்னிருகரத் தற்புதத்தீசனே
பாவை வள்ளி தெய்வானை சமேதனே
நின்னடிமை நவநீத கிஷ்ணனென்
நிலைநிந்தினி யூதரித்தாள்வையே.

2. கந்தநாதக் கடம்பவேளற்புதா
கார்த்திகேயாக்குகா ஷண்முகா வேலா
தந்தை யன்னையும் பந்துவு முன்னேயே
தஞ்சமாகி யனுதினம் போற்றுமென்
சிந்தையுட்க் குடிகொண்டு முலாவிய
சின்மயானந்தநின் காதுள்ளேற்றிய
பந்தமாம் ருணம் நோயிடரும்மிடி
பகையுங் கோள்வினைத் தீதைய றுப்பையே.

3. அண்டருக்கிடையூர் செய்தரக்கரின்
ஆண்மையோடும் வதைத்ததிதீரனே
தண்டமாயுதங்கொண்ட பிரதாபனே
தரளவெண்மதி வதனவிலாஸனே
தொண்டனென்மனம் வெப்பமேயாற்றியே
தொழில் முயலுத்தியோக முயர்த்தருள்
கொண்டு கட்டைத்தாதன் சாத்தூர் மன்றகக்
கோர்ட்டுள்ளுய்தலுக் கென்னையு மேற்றுவாய்.

4. அம்பிகை யுமையா ளருள்பாலனே
ஆதியந்தமு மற்றமும் மூர்த்தியே
உம்பர் மாமுனி யோகித்துறவியர்
வுத்த மத்தடியா ரகம்வாஸா வென்
தம்பியாம் வெங்கடாசலம் நோயற
தன்றொழில்முயலுத்தியோகங்கூட
நம்பினேனுந்தன் நற்றமிழ்சொற்படி
நல்குவாய் வடிவேல்முருகையனே.

5. பஞ்சபூதமு மொன்றாகி நின்னிணை
பாதமேபரஸாதகமாகவே
தஞ்சமாகிப் புகழ்ந்து மகிழ்ந்திடுந்
தாஸனுக்கருள் செய்வதாக் கையமேன்

வஞ்சகத்துடன் நீயிருக்கொப்புமோ
வணங்குமென்முறை கேளாதிருக்குமோ
கொஞ்சமேனு மெழியேனுக்கேகிதி
கொடுத்து மாதரிப்பா யிதுவேளையே.

6, மாசியுமருவற்ற பொன்மேனியா
மங்களாகரமாமயிலுல்லாஸா
ஓசையான வைகாசி விசாகமே
வோடிவந்தெனைச் சார்ந்திடை பூவைதன்
வேசடை மன வெப்பம் பிணிதீர
வேண்டியீரைந்து மாதம் பணிந்தனள்
யாசிக்கு மருள் பால் பொருள் பொங்கியே
யானடைந்துங் களித்திடமைப் பையே.

---

இராகம்...அனுமத்தோடி—யேக...தாளம்.

பல்லவி.

கந்தா கருணை புரிவீர் அருள் தந்தாதரிக்க வருவீர் (கந்)

அநுபல்லவி.

ஸந்தத முந்தனர விந்தம் பணிந்தெனக்கு (கந்)

சரணம்.

1. சீரே யிலகுஞ் செந்தூரே வுலவுங்குக
ஞரேவுமதடிமை பேரே நவநீதனென்
நேரே வந்தெனைக்காப்பீரே சிந்தையுள்ளிருப்
பீரே தந்தையு மன்னை நீரே (கந்)

2. தேனே மாதவன் மருகோனே ஸாதகமுரு
கோனே வாதனை நீக்குவோனே பன்னிருகரத்
தோனே நன்னிதிதருவோனே வும்மையே நம்பி
னேனே சோதனை செய்குவானே (கந்)

3. நாதா வள்ளியாள் ஸமேதா ஆனந்தஸங்
கீதா பசுமை பொற்பாதா அனந்தாமிங்
கீதா தாஸனென்மீதில் வாதா முறையுங்கே
ளாதா சோதனை போதாதா (கந்)

4. தீரா முகில்வடிமாயூரா சத்துருஸங்
காரா முத்தணிச்சிங்கார தத்துவவோங்
கார நித்தியஞான ஸாரா பத்தருக்குப
காரா வுத்தமி குமாரா (கந்)

5. வேலா ஆடவரின்பலீலா ஸந்ததமணக்
கோலா மாமறையாதி மூலா அரும்ஞான
விசாலா புவிபுகழுஞ் சீலா சங்கரனீனே
பாலா யேழையர்க்கனுகூலா (கந்)



இனிச்சுமக்க முடியாது தேகம் யென்ற வர்னமேட்டு.

ஆனந்தக்களிப்புக் கண்ணிகள்.

அடிமை யினிப் பொருக்கேனே வறுமை—செந்தில்வளர்
ஆறுமுகவேலவ்னே பந்தருணச் சிறுமை (அ)

1. ஸந்ததமானந்த குகநாதா—அருமைதிரு
சரவணபவானந்த பங்கைமலர்பாதா
தந்தைக்கு ஞானமொழி போதா—பவழக்கொடி
தையல்குற வள்ளி தெய்வானை ஸமேதா (அடி)

2. தீராத பிணியைத் தீர்ப்போனே—அனுதினமுந்
திருவடியைப்பணியு மவர்பாக மிருப்போனே
நேராக நிதியைக் கொடுப்போனே—முன்றீதால்
நேர்ந்த நவக்கிரகக்கொடி வாதையபறுப்போனே (அடி)

3. சோலைமாமலை யுட்சென்றோனே—புனங்காக்குஞ்
சோபிதக்குறவள்ளி முன்னே நின்றோனே

மாலையிடவந்தே னென்றேனே—வனத்திலுள்ள
மதுக்கலந்த மாவை வள்ளியியக்தின்றேனே (அடி)

4. வேடனுருகொண்ட மகமாயா—தினைப்புனத்துள்
வேங்கை மரமாய் முளைத்தவின்யா ஸகாயா
ஆடவர்கள் நடனமதில் நேயா—முப்போதும்
அடிவணங்கி புகழும் நவநீதன் ஸகாயா (அடி)

5. இந்திரன்புதல்வி மணவாளா—தாஸன்
யிடுக்கருணக் கடுப்பையு மறுப்பாய் தயாளா
சந்திரன் வதனக்கிருபாளா—யிளமைதிரு
சரவணபவானந்த பன்னிருகை தோளா (அடி)

6. துறவியுருகொண்ட ஜெகஜாலா—நின்செயலைத்
துதிக்குமென் னுறவான தாஸானுகூலா
பிறவிபவம் நீக்கும் வடிவேலா—யிப்புகழிற்
பிழையேதிருந்திடினும் பொறுப்பா யுமைபாலா (அடி)

7. சுத்தநிற்குணமானவுருவே—ஸகலவுயிர்
சுக்கிலமுஞ்சோணித முஞ்சூட் சுமக்கருவே
சத்திசிவஞான ஸற்குருவே—ஸந்ததமுஞ்
சத்துசித்தானந்த கற்பகத்தருவே (அடி)

8. அலைகடலி னருகிலமர்ந்தோனே—நின்மகிமை
அற்புதத்ததிசயத்தைப் பகரப்புரிந்தோனே
இலைநீறின் கீர்த்தியடைந்தோனே—நம்புவர்க்கு
யிகமும் பரகெதியைத் தருங்கருணை மிகுந்தோனே (அடி)

இராகம்...பூரிகல்யாணி—தாளம்...சாய்பு.

பல்லவி.

என்மீதிலித்தனை வாதோ முறை
யேனுந்தான் காதுங் கேளாதோ

அநுபல்லவி.

அன்பனுக்கன்பனே ஆறுமாமுகவனே
இன்பக்கடலாளும் பீராறுகரத்தோனே (என்)

சரணம்.

1. பத்தரெட்சகனென்றும் பேரே யெனைப்
படைத்தவனுண்மையில் நீரே
உத்தமனே தாஸன் குற்றம் பொறுப்பீரே
ஆழ்வினைத்தீதை முழுதுமறுப்பீரே
சத்தியானந்தவல்லி புத்திரா
ஸரவசி வள்ளி தெய்வானை களத்திரா
முத்திதருந் திருச்செந்தின் சேத்திரா
முருகவேளீராறு நேத்திரா (என்)

2. ஈசாநின்னடி கொண்டேன் றஞ்சம் முறைக்
கிரங்காத கல்லோ நின் நெஞ்சம்
மாசிலாமணிமயனேயருளே கொஞ்சம்
மயங்காமயென்பாகம் பகிர்ந்தாலுண்டோ பஞ்சம்
தேசுமாமுருகேசனே ஞான
தேசிகா கருணேசனே
வீசுமாமலை சோலைவாஸ
விலாஸதயப்பிரகாச குருபரா. (என்)

3. ஐயனே நின்னுமத்துதியே செப்பும்
அடிமைக்கு நீதானே கெதியே
துய்யனே காத்தருள் செய்யவித்ததியே
துணையுடன் நவநீதனுக்கீவாய் நிதியே
வைய்கந் தொழுங்கண்யனே வுனை
வணங்கினேன் ஆரண்யனே
சையோகானந்த சுப்ரமண்யனே
சரவணோத்பவ தர்மபுண்யனே, (என்)

பித்தாபிறை சூடி பெரு மானே யருளாளாய் யென்ற வர்னமெட்டு.

கண்ணிகள்.

1. சீரே மிகுந் தேறுஞ் செந்தூர் சிங்காரவேல்முருகா.
நேரே புகழ் கூறுஞ்சிவ நேமருக்கனுக்கிரகா

2. சுத்தநிற்குண தத்துவானந்த சுப்ரமண்ய வொய்யாரா
சித்தர்மாமுனி முத்தர் யோகியர் சிந்தைவாழுமயூரா.

3. எந்த நேரமும் வந்தனம்புரிந் தென்மனதுள் விசாரமே
கந்தனே ருணபந்தம் நீக்கிடக் கடமைதானுந்தன் பாரமே.

4. ஆதியே பரஞ்சோதியே யென்னை ஆதரிப்பதும் பெரிதோ
வீதியாம் புவி மீதிலே வுய்ய விளங்க வைப்பது மரிதோ.

5. அடுத்துவந்தெனைப் பிடித்து ருணத்துக்குள் ளாட்டிவைப்பது
ம் ஞாயமோ, தொடுத்து முன்செய லெடுத்து மோதுமென்
றொல்லைநீக்கா தெம்மாயமோ.

6. பெற்றபிள்ளை செய் குற்றம் பொறுப்பதாய் பேருலகர் சொல்ப்
பொய்க்குமோ, வெற்றி வேலாவுன் சிற்றமேருண வேதனை சிற்
றுந்தைக்குமோ.

7. கற்பகத்துறு மற்புதையனே கடுஞ்சினத்தையும் கொள்ளாதே
பொற்பதா சிவதற்பரா எனைப்போபோ வென்றுமே தள்ளாதே

8. நித்தமும்வுனைச் சுத்தியே வரும் நின்னடிமைமேல் வர்மமோ
உத்தமாதயச்சித்தனே யெனக் குதவிடாததுந் தர்மமோ.

9. வாதனை பத்தி சோதனை போதும் வடிவேலா வருள்கொஞ்சமே
நாதனே நவநீதனுக்கீவாய் நாடிடும் நிதி கொஞ்சமே.

இராகம்...பிலகரி—தாளம்...ஆதி.

பல்லவி.

கந்தனே கடைக்கண்பாரையா-ஸாமி
யெந்தன் குறை யினித்தீரையா.

அநுபல்லவி.

சுந்தரா துரந்தரா நிரந்தரா வரந்தரவே (கந்த)

சரணம்.

1. அந்தமே மிகுந்த திருச்செந்தி நகரந்தனில் வாழ்
விந்தையனே யெந்தனுட புந்தியில் மகிழ்ந்துளாவும்
தந்தை யன்னை பந்துந்துணை ஸொந்தனே நீ யிந்தவேளை
வந்துதவி தந்தும் ருணபந்தமே வொழிந்திடவே. (கந்த)

2. பெற்றபிள்ளை குற்றங்களை முற்றுமே பொறுத்தருளும்
சித்த பரிசுத்ததய சத்திசிவ வெற்றி வேலா
உத்தம பதத்துணையை நத்தியனு நித்தமுறை
கத்துமெனைப் பற்றியிடர் சிற்றும் பகை சுத்திடாமல் (கந்

3. ஐயனதி துய்ய முருகையாரவி மெய்யனே நின்
பையன்றுயர் கொய்யவருள் செய்யவுனக்கையமேனோ
சையல்நடை வொய்யாரிளைத்தையல்வள்ளி மையலோனே
சையோக வாழ்வையகனே குய்யுமெனை வுய்யருளிக் (கந்

4. வல்லினமா யல்லும் பகல்ச் சொல்லுமுறைக் கெல்லாற்று
க்கும், கல்லைப்போலும் நில்லாமலென்றொல்லை ருணமொல்
லை நீக்க, வல்லையோ நான் பொல்லாதனோ நல்லதந்தை
யில்லையோ நீ, மல்லி முல்லை கொல்லை செந்தூரெல்லை வளர்
ருல்லாஸவேள். (கந்த)

5. ஆதியுமனாதி பரஞ்சோதியுமை மாதசுதா
மேதினி விபூதிமய வேதியர்கள் மீதுறவு

நாதனும் விநோத ஞான போதக நற்ஸாதகனே
வாதைபரி சோதனையும் போதும் நவீதனெனை (கந்த)

6. மிஞ்சும்பஞ்சபூத மொன்றாய் கஞ்சமலர் தஞ்சமென்றென்
நெஞ்சகமுள் ளஞ்சலித்தேன் மஞ்சுளா சஞ்சலம்விட்டு
குஞ்சரியாள் வஞ்சியுடன் கொஞ்சுமன மஞ்சிதனே
அஞ்சியுனைக் கெஞ்சுமெனை வஞ்சிக்காமல் கொஞ்சமே
னுங் (கந்த)

—ooo—

இராகம்...வஸந்தா—ரூபக...தாளம்.

பல்லவி.

கந்தா வுனக்கிந்த சினம்வந்தவித மெந்த வகைதானோ

அநுபல்லவி.

திருச்செந்தி லமர்ந்தரு விந்தை வேள்சுந்தர (கந்தா)

சரணம்.

1. நாதா விநோதா பொற்பாதா ஞானபோதா
நீதா ஸங்கீதா யிங்கிதா மூல வேதா
வினைத்தீதும் ருணம் பிணி வாதை யகற்றிட (கந்தா)

2. மாயா மதுவாயா பொற்காயா கருணேயா
ஞாயா மனத்தூயா முருகேயாஸ காயா
உமை சேயனே நின்னருள் சாயதயாநிதி (கந்தா)

3. வேலா முனிக்கோலா ஜெகஜாலா மறை மூலா
லோலா யின்பலீலா பரிபாலா அனு கூலா
வெகுகாலமாய் நின்கழல்மேல் பணிந்தென் மீதில் (கந்)

4. தீரா சிங்காரா மாயூரா வொய்யாரா
வீரா ஸங்காரா யுத்தஸாரா வுபகாரா
உதாரா நீ பெற்ற குமாரன் யான் நவநீதன் (கந்தா)



இராகம்...பரசு—தாளம்...ஆதி.

ஓர் தேவார வர்ணமெட்டுக் கண்ணிகள்.

ஈசா வருள் செய் வல்லையா கொஞ்சம்
யிரக்கமுந்தானில்லையா.

1. செந்திமாநகர் வளர்கந்த வேளற்புதா
செஞ்சுடர்க்குகநாதனே
விந்தை யுள்ளரவிந்தம் வந்தனம் புரிந்திடும்.
விப்பரன் நவநீதனே (ஈசா)

2. அரவாபரணன்றன் னருமையினை யசுதா
அம்புவி பரிபாலா
சரவணபவகுகா சுரபதி ஷண்முகா
சச்சுதானந்த சீலா. (ஈசா

3. மருந்துகள் செய்யுமுறை பொருந்தும் பண்டிதக்கோலா
மறைத்துரு கொண்டோனே
வருந்தியே மதுவர்க்க விருந்து புரிந்த குற
வஞ்சி மாவுண்டோனே (ஈசா)

4. மரகத பச்சைமேனி துரகபதாதிஸேன
மாதவன் மருகோனே.
நிரைநிதி பூபாலா வரத வடிவேலா
நிபுணமா முருகோனே (ஈசா)

5. சரணமடைந்த திரு அருணகிரி தன்நாவில்
சடாட்சரம் வரைந்தோனே

பிரணவமந்திரத்தைக் கருணை கொண்டோங் கவர்கைப்
பிடித்துக்கடாட்சித்தோனே. (ஈசா)

6. வனச்சுனையுள் வள்ளி தனத்தைத் தழுவிபல
வாதம் புரிந்த மாயா
நினைத்ததவ் வஞ்சியைப் புனத்துணுட்க் கூடிய
நிகரிலா முருகேயா (ஈசா)

7. ஸொற்பனும் யானுந்தன் ஸற்புகழோது மென்
சொல்லுக் கிரங்கா தேனோ.
வற்பிணி நீக்கிடுந் தற்பரா நின்னடியை
வணங்கிய பிழைதானோ. (ஈசா)

8. பத்தரை யாதரிக்குஞ் சித்தனும் நீ யெனவே
பாரினர் சொல்லும் பொய்யா
உத்தமச் சேவடிக்கே பற்றியே வந்தெனக்கு
வுதவிடா தேனோ ஐயா (ஈசா)

9. ஓடிப்பறந்துவிளை யாடுமோமயிலேறும்
வொய்யாரக் களையோனே
பாடிப்பணியுமெனைப் பிடிக்கும் ருண மேகப்
பரத்துவா யிளையோனே (ஈசா)

10. ஆண்டிநின்னடியார்க்கு வேண்டும் நிதியேதென்றால்
அவமதிப்புனக்கில்லையோ
தீண்டிடுங் கிரகக்கோள் மூண்டிடவொட்டாமல்த்
திருப்புவதுந் தொல்லையோ (ஈசா)

11. சிறியவறுமையும் யேறியமிடியிடர்
சிறுமையை யாருக்குரைப்பேன்
கூறியமுறைக்குப காரமே யில்லாவிடில்
குமரா யெவ்வாரு பொறுப்பேன். (ஈசா)

12. கோலாகலமனுகூலா நின்றுஸனென்
கொடுமை தீர்ப்பதுன்பாரமே
நாலாவிதங்கூறுங் காலமறிந்துவரம்
நல்குவாயுபகாரமே. (ஈசா)



இராகம்...யெதுகுலகாம்போதி—தாளம்...சாப்பு.

பல்லவி.

இன்னுமன மிரங்காதென்ன காரணமோ
யினி யென்செய்வேன் வேலா.

அநுபல்லவி.

உன்னதத் திருச்செந்தூர் சன்னதி தன்மகிமை
வுண்மை கொண்டாடுமெந்தன் றண்மைக்கருள்புரிய (இன்

சரணம்.

1. மாயப்பிரபஞ்சத்தின் வோயாப் பிரப்பை நீக்கும்
மருத்துவத்தோனேயெனை வகித்துமாதரித்தாள
தூயா கருணுகரா ஆயாஸமேனுனக்குத்
துணைபுரியா யோதயா குணபதி வேல்முருகா (இன்)

2. கோடிப்புவியோ ருன்னைத் தேடிவருந்துணிவை
கொண்டு கடுமுறையை விண்டேனடி வணங்கி
வாடி மயங்கா வண்ணம் நாடிவராததேனோ
வஞ்சகஞ் செய்யலாமோ தஞ்சமடைந்தெனக்கு (இன்)

3. விண்ணுளுங்கெண்ணியனே யெண்ணுளென்வரமீந்து
விளங்கப்புரியமனக் களங்கமகற்றிடாயோ
மண்ணுளும் நன்னரசே கண்ணுலே நோக்கி யெந்தன்
மனதுள்ப் புகுந்த குறை தனதாயுகந்துந் தீர்க்க (இன்)

4. மண்டலம் புகழக்கண் கண்ட தெய்வம் நீதானே
மனங்களிக்க மைத்திடுந் தனக்களஞ்சியத்தோனே
குண்டலஞ் சலங்கைபொன் றண்டை குலுங்குன்பெருங்
கூத்துக்கும் நாளுளில்லை போற்றி வந்தேனே கல்லே (இன்)

5. இப்படி நீயிருந்தா லெப்படித்தான் சகிப்பேன்
யிரக்கமில்லையோ பசி கிரக்கந்தீர்த்தாதரிக்க
செப்பும் நவநீதனை வொப்பாதகல் நெஞ்சனே
செய்யுமிதர்க்குபாயம் வையகந்தனிலுண்டோ. (இன்)



இராகம்...காப்பி—தாளம்...சாப்பு.

ஆனந்தக்கும்மி கண்ணிகள்.

1. பாரிலிசை யேறிய செந்தூரிலகும் வேலா
பாவை வள்ளி தேவயானை பாக மணக்கோலா
வீரராம் விகாரரக்கர் மூடறுத்தகாலா
விந்தமே பணிந்த நவநீதனனுகூலா

2. வீசுமலை வாஸதவ பூசுரர்கள் நேசா
விர்ப்பன்னர்கள் செப்பும் புகழொப்புங் கதிரேசா
மாசிமரு வற்றபிரகாசனே வுல்லாசா
மங்களவேள் திங்கள் முகத்துங்கா ஞானதேசா.

3. ஆதிபரஞ் சோதி ஜெக நாதனே தயாளா
அற்புத செம் பொற்பதவே ளாறுரெண்டு தோளா
மாதுவள்ளி மீதிலதி மோகமணவாளா
மாமயிலுக் கொத்திளைய வுத்தமக் கிருபாளா

4. ஈசா குமரேசா ஞான தேசா கருணேசா
யிடுக்க ருணக்கடப்பு மிடியறுப்பாய் கதிரேசா

தேசமந்தகாஸா போக லீலனே விலாஸா
தேகிதனம் பாகித் தீவாய் தர்மா முருகேசா

5. நாலுமறை நாலுமாறும் ஞாலந்தொழுந் தூயா
நஞ்சையுண்டோன் செஞ்சடையோன் றன்னருமைசேயா
கோலாகல சீலா பரிபாலா புவிஞாயா
கோரிமுறை கூறுங்குறை தீர்ப்பா யென் ஸகாயா

6. விண்ணோர் தொழுங்கெண்ணிய மாரண்ணியம்வாழ்தேனே
விஞ்சைமறை மந்திரத்தைத் தந்தைக்குரைத்தோனே
திண்ணத்தவ புண்ணியமாயோகி யுள்ளத்தோனே
தீனரபிமானதய பன்னீர்கரத்தோனே.

7. ஓடிவிளையாடுமயி லொத்தவே ளொய்யாரா
வோமவேள் விநேமந்தண ரோரினுபகாரா
நாடித்துதி பாடியுனைக் கூடினேன் மயூரா
நற்றுணையாய்ப்பற்றிடுவாய் வுத்தமி குமாரா

8. பொறுக்க முடியாத ருண மிடுக்க மறுப்பாயே
போதும்பத்தி சோதனையை விட்டகற்றுவாயே
சிறக்கணிப் போடிரக்கமுடனோடி வருவாயே
சின்மயனே நன்மை யீவாய் தந்தையுந்தாய் நீயே.

9. சூரபத்மன் றாரறவே பாரிலுதித்தோனே
சுந்தரனே பந்தருணம் நீக்கென் றுரைத்தேனே
ஆரபாரா வீரரக்கர்மாள வதைத்தோனே
அற்புதமா தற்பரா கைவேலைத் தரித்தோனே

10. அண்டம் பிண்டம் யாவிலிசை கொண்ட பெருமானே
ஆதிமூல நாதன் திருமாலோன் மருகோனே
தொண்டனெந்தன்பண்டுவினைத்துண்டிப்பாயென்றேனே
தொல்லையிடும் பொல்லாரை யறுப்பாய் முருகோனே

11. கார்த்திகேயா நீதஞ்சமாப் நம்புமென்னைப் பார்ப்பாய்
கலிபகற்றியருள் பொருளுந்தாஸன் குடி சேர்ப்பாய்

பூர்த்திதய மூர்த்தியுந்தன் கீர்த்தி கும்மி யேற்பாய்
பூமணசீர் மாமயிலா கூறுங்குறை தீர்ப்பாய்.

இராகங்...தேசிகத்தோடி—தாளம்...ஆதி.

பல்லவி.

எப்போ வருவீரோ யென்முகம் பார்க்கீரோ (எப்)

அநுபல்லவி.

சுப்ரமண்யானந்தா சுந்தரவேள் கந்தா (எப்)

சரணம்.

1. மரகத பச்சைமேனி மாதவன் மருகனே
துரகபதாதி ஸேனு துணைசெய்ய முருகனே (எப்)

2. பத்தர் பரிபாலா பரிமளானந்த சீலா
சித்தனுருக்கோலா சின்மயவடிவேலா (எப்)

3. சிவகுருநாதனே சிற்சபை நீதனே
குவலய விநோதனே குறவள்ளி ஸமேதனே (எப்)

4. வரகுணனந்த சுகா வானவர் தொழுங்குகா
பிரணவத்தோனே ஜெக பிழை பொறுத்தறுமுகா (எப்)



## திருப்புகழ் வர்ணமெட்டு.

1. பங்கை மலர்பதத் தங்கத் தொளி யெழி
லங்கத் துடையவெண் டிங்கள் முகந்திரள்
கொங்கை யுளகுற மங்கைக்குறுமண வாளாமிகவுந் தயா
ளா பன்னிருதோளா—தூயகிருபாளா அடிமையான் நவ
நீதன்.

2. பத்துத்தலை பகை வெற்றிக் கொத்தது
மெத்தத் திரமையைப் பெற்றவல் ராவணன்
கொத்தள முற்று மெரித்திட மைத்தவன்—மருகோனே
வேல் முருகோனே—கடலருகோனே—யனுக்கிரகோனே
பிழை பொருப்பாயே.

3. மேட்டுத்தினப்புனம் நாட்டமாயேகி
சீமாட்டி வள்ளிகண் காட்டிய வளைவிகைப்
பூட்டியுமவள்க் கெழில் கூட்டிய செட்டியே
மாயா—சுடருமை சேயா—வடியர் ஸகாயா—மதுரச்
சொல்வாயா வென்மனம் வாழ்வோனே.

4. நீரின் சுனையகம் நாரி வள்ளியை
வாரித்தழுவி பின்னேரிக் கரையிட
மீறியேவோடவள் மாறித்திரும்பிட
தந்திமுகவனு மைந்துகரன் சொரி
தொந்திவுதரனை வந்தனம் புரிந்திளை—வடிவேலா

5. கற்பகத்தருவள்ரற்புத சுரர்பதி
பொற்பதவேள் மயதற்பரமும்மய
வுற்பவத்தறுமுக ஸற்குருபர வடி வேலா கருணைவிசால
ஸதாமணக்கோலா—புகளுமை பாலா ஷடாட்சர
குகநாதா.

6. ஸந்ததமுன்றிருவிந்தம் பணிந்தும்
புகழ்ந்துமே வந்தவென் சிந்தை மகிழ்ந்திட
பந்தருணம் மதைக் கந்தனே நீக்கிட வருவாயே—யிஞ்சா
பெருவாயே—நிதிதருவாயே—யருள்புரிவாயே யிது தருவேளை.



இராகம்... அமீர்கல்யாணி—தாளம்... ஆதி.
வாசா மகோசரமே மன்ஸா யேன்ற வர்ன்மேட்டு.

4

பல்லவி.

கொஞ்சமேனும் வுந்தன் நெஞ்சமிரங்காதோ (கொ)

அநுபல்லவி.

தஞ்சங்கொண்ட வென்னை வஞ்சகஞ் செய்யாமோ (கொ)

சரணம்.

1. தாரணியாள் நாதா பூரணாதி வேதா
தாஸனென்மேல் வாதா வோசை சொற்கேளாதா
தோரணி விநோதா ஸாரஞான போதா
தொல்லை யென்முன் றீதா மொல்லையும் போதாதா (கொ)

2. முத்தணிச் சிங்காரா பத்தர்க்குபகாரா
முருகவேளொய்யாரா கிரகக்கோள் நிவாரா
நித்தனே வோங்காரா சத்துருசங்காரா
நிர்மலா மயூரா தர்மியாள் குமாரா (கொ)

3. மெத்த கோப மென்மேல் வைத்தால்ப் பொறுப்பேனோ
மேவிக்கோருமெந்தன் றேவைதாராதேனோ
உத்தமா வென்முறை பற்றவையந்தானோ
வுதவிசெய்தருளாப் பதவிக்கென் செய்வேனோ (கொ)



வேறுசந்தந் திருப்புகழ் வர்னமேட்டு.

1. செந்திமா நகரலைகடற் கரையருகந்தமானதியிசை யுளதாமணச்
சந்தணகிரியுறை சரவணபவ—குகநாதா

2. பெருக்க மானராந் தவசுரர்களுக்கிடர்
பொறுக்கடங்கிடா மிடிபுரிந் தரக்கரைக்
கருக்கெரித்திட வனலாறு பொரிகளா—யுதித்தோனே

3. பிரபஞ்சமற்ற நற்றவசியரொளிக் கெட்டா
கிரௌஞ்சிவுயர் கிரியகஞ் சிறை கொண்டுனீயே
பெருஞ்சினத்துடனலரிட வுதவிய—குமரேசா

4. பெருத்தவுதரமுங் கரிமுகந்தும்பிகை
விரித்த கரணமும் பாசாங்கு சங்கரந்
தரித்ததொரு கொம்புமரவநூ லணிந்தவன்-யிளையோனே

5. அருஞ்சிவானந்த கைலையாள் சிவன்சுதா
பரஞ்சுடரொளி மயசுய குருபரா
சிரஞ்சிவிநற் பரிமள மெய்ரவிக்—கலையோனே

6. நெருக்கமான வென் வறுமையும் ருணமிடர்
கிரக்கிடும் நவக்கிரகக்கோள் சினமற
வுருக்கமோடுமென் மனக்குறை தீர்ப்பையே—தயசீலா.



இராகம்...நாதநாமக்கிரியை—தாளம்...சாப்பு.

பல்லவி

வாவா ஷண்முகவேலாயுதனே குக
தேவா அருமை மெய்ஞான பண்டிதனே (வா)

அநுபல்லவி.

கொடி சேவலக் கருணாகரத்திரு வாறுமாமுக நாதனே (வா)

சரணம்.

1. செந்திமாநகர்தனில் வாஸா திகழ்
செவ்வேள் மயானந்த மாமுருகேசா
கந்தனே லோகப்பிரகாசா தோகை
கானமாமயி லேறும் பவனியுல்லாஸா

சுந்தரமெய்ஞ்ஞான தேசா பத்ம
சூரரை வதைக் கவதரித்த வின்யாஸா
இந்துவதன விலாஸா நின்மேல்
யிசைபாடுந் தாஸன் நவநீதன் நேசா (வா)

2. கற்பகத்துறுஞ் சுரர்நாதா நீ யென்
கவலையகற்றிடக் காலம் போதாதா
தற்பரனே யென்மேல் வாதா மனத்
தாகத்தைத் தீர்க்கக் கருணை வாராதா
பொற்பதா வுதவ லாகாதா ஸதா
போதிக்கு மென்முறை காதுங்கேளாதா
அற்புதா முன் செய்தநீதா அதை
அகற்றியும் பேணிட நெறியு மோதாதா (வா)

3. ஐயனே நின்னருமைத் துதியே செப்பும்
அடிமை யெனக்கு நீயேதானே கெதியே
துய்யனே யீகுவாய் நிதியே ஸதா
துணைபுரிந்தாளுவாய் ஸேனாதிபதியே
தையலிருவெழில் ரதியே கூடுந்
தன்னியா வென்குடிக் கமைப்பாய் நல்விதியே
மெய்யனே கண்பாரித்தநதியே அது
மேலான நெறி நூலுக்குந்தான் ஸம்மதியே (வா)

4. தத்துவஞானதிமூலா சிவ
தற்பரனே தொழுந் தாஸானுகூலா
நித்தியமங்களக்கோலா சுய
நிர்மல நிர்குண சூட்சுமத்தூலா
சத்திய தர்ம விசாலா யிளை
சரவணபவகுகா ஆனந்த சீலா
சத்துரு ஸங்கார காலா அன்னஞ்
சாயல் நடை வள்ளி தெய்வானை லீலா (வா)



வேறு சந்தந் திருப்புகழ் வர்ணமெட்டு.

1 ஓமென வென்றேரெழுத்தின் மூலன் திருமால்மருகா
கோமளிசீர் தேவி சிவகாமி யருள்பாலாயிரு
காமியமூ மீயுமனத்தூய தயவேள்மயமா—முருகோனே.

2. ஆதியு மனாதி பரஞ்சோதிச் சுடர் மேனி ரஸ
வாத முரை நாத விரிமேதினி யுட்க்கியாதியா நின்
ஸாதகமே தூதரெமன் றீது மணுகாமலெனைக்-காப்பாயே

3. ஓங்குமலை சோலைவளர் கோதை வள்ளி வாழ்புனத்தை
நோங்கிகுற வேடர் பசித்தோடி வரக்காணஞ்சியே
வேங்கைமரமாகி மலராகி திரள் காய்கனியாய்-நின்றோனே

4 ஆதாரமுன் றுதிபை வோதிவருந்தாஸனெந்தன்
றீதாறக் கோரிமுறை கூறுமொழிக்காதரிக்க (மீவாய்
பாதார விந்தமே முப்போது முனைப் போற்றிடுமென்—வா

5. மாசிமருவற்ற பிரகாசஞான தேசிகநின்
றேசுகழல் பூசித்திடும் பூசுரர்கள் நேசவிசு
வாஸமன வாஷியும் விலாஸதய யீசனுனை—மறவேனே.

6. கூனுங்குருடுமை செவுடங்கவீன மேதின்றியே
மானிடனாய்க் கருவிலுருவாக்கி யெனை யீன்றமுதைத்
தேனுஞ் சுவையாறுங் கலந்தூட்டியு மோராட்டிய வென்
(சுயமாதே.

7. நாவுதமொறி மதிமாறி கலைமாறிபல
தீவினைகளேறி கடுகோபிலுடல் சேராவண்ணங்
கூவுமயில் மீதிசைய சேவற்கொடி யோனே வெனைக்
(காப்பாயே.

8. பாசபந்தமாம் பிறவிவோய யிறப்பேயகற்றும்
யீசகுமரேச கருணேச கதிரேச ஞான
தேசிகப்ரகாச முகில் வாசியே வுல்லாஸ வெழில்
(முருகோனே.

9. ஆவியுடலூணுமுனக் கேவதிலுமேதனது
பாவனை யுமேதெனக்கு யாவுமுன்னருகையே
பூவை வள்ளி தேவி யணவாள சுகபோகனேயென்
(றுணை நீயே)

—∘∘✧∘∘—

இராகம்...மாயமாளகௌளை—தாளம்...சாப்பு.

பல்லவி.

வருவாய் வேல்முருகா—யீசாவுந்தன்—தாஸன்வரந்

தருவாய் மால் மருகா.

அநுபல்லவி.

மிகப் பெருமை பெற்ற ஞான அருமைமாமணியே
பொறுமையோடு மெந்தன் வருமை நோயகற்ற (வரு)

சரணம்.

1. சிவசுப்ரமண்யா சித்தர் கோலா சத்திவேலா சின்மயாரண்யா
புவியாளுங்கண்யா பத்தர் குறை முற்றுந்தீர்க்கும் பூரணபுண்
யா நின்மேற், கவிதை பாடிவரும் நவநீதகிஷ்ணனென், கவலை
யகற்றிடத் திவலைச்சவலமின்றி (வரு)

2. ஆறுமாமுகனே நித்தியானந்தி வுத்தமியுமை அம்பிகைமகனே
நீறணிக்குகனே தத்துவமய பித்தனார் சேயா நிர்மலச்சுகனே
இனி, வேறுதுணையுளதோ போறும் பரிசோதனை, கூறுமுறைக்
கிரங்கி யேறுமயிலிசைந்து (வரு)

3. அடிமை நின்றஞ்சம் அகிலமுள்ள ஸகலமுன்கை ஆனப்பிரபஞ்
சம், மிடிநீக்க நெஞ்சம் யிளகியேதான் யெழியே னெந்தன்மீதி
லுங்கொஞ்சம் வைத்துன், னடிபிடித்தொழுகுமென் குடிகிளை
த்திடர்ப்பிணி கடிதுலாக வேகம் வடிவேலவயிணி (வரு)

4. என்மீதில் வாதோ ஸதாவோதும் முறை காதும் யேனுங்கேளா தோ, நன்மை வாராதோ பரிபர்லா அநுகூலம் நல்கலாகாதோ தய்ய, அன்பருக்கன்பனே தென்பொதிகையனே, நின்பதம் போற்றிடு, மென்குறை தீர்த்திட (வரு)

வேறு சந்தந் திருப்புகழ் வர்ணமெட்டு,

1. அஜம்பரி முகில் மயிலிசைந் ததிவதிசய
புஜம்பணி ரெண்டுடைய ஜெயக்கதி ரயில்கர
நிஜமதகெஜமுகனனுஜ நல்விஜயஸற்—குமரேசா

2. பிரளய படைபதி பத்மனை வதைத்திட
தரளவெண் மதிமுக முடனவ தரித்தவ
திரள்குவிதன மெழில் குற வள்ளி ரமமண—அநுகூலா

3. சமணரின் முடிகுடி படையடியுடனற
அமரர்கள் மனமமர் மிடியிடர் முழுதற
வுமைபதி சிவனனல் நயனம் நின்றுதித்ததி—ஜெயதீரா

4. அழகிய முகில் மயிலிசைந் தெழில்க்குருபர
கழல்பணிந்துதி செயுமெழிய னென் குடிகளை
பழவினைய தன்வழித் துடர்பிணி ருணமற—அருள்வாயே

5. ஐம்புலமொன் றடைக்கி யனுதினமுனைத்தொழும்
வும்பர்கள் துறவியர் முனிமன முறுஞ்சுக
அம்புவி மறைபதி சரவணபவகுகப்—பெருமானே

6. தவம்புரி சித்தர்க ளவர்மன மமர்ந்திடுந்
தவள மெய்க்களையினை ரவி வொளிக்கதிர்தர
சிவகுருபர திருச்சுடர் மணிமயா வெனைக்—காப்பாயே

## இராகம்—பூபாளம்—மங்களம்.

சீரேறுஞ் செந்தில்வளர் சிங்காரவேல்முருகா
பாரேறுங் கீர்த்தி பெற்றப் பரிமளனே மங்களம்
நாரதாதிமுனிவர் விண்ணோர் நற்றவத்தோர்மறைபணியும்
தீரசெவ்வேள் குமரகுருவே திருக்கடம்பா மங்களம்
திங்கள்முகா செங்கையோனே தீனபரிபால வேலா
பங்கைமலர் பாதத்தோனே பன்னீர்கையா மங்களம்
வரத கந்தா ஷண்முகனே வள்ளி தேவயானை மணு
விரத நவநீதகிஷ்ணன் விளம்பும் நித்யமங்களம்

முருகன் புகழ் கீர்த்தனம்.




## பிழை திருத்தம்.



| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| 11 | 4 | 7 | சோற்படி | சொற்படி |
| 13 | 4 | 2 | சிங்கார | சிங்காரா |
| ,, | ,, | 3 | கார | காரா |
| ,, | 5 | 3 | சங்கரனினை | சங்கரனிள் |
| 15 | 1 | 7 | சேத்திரா | க்ஷேத்திரா |
| ,, | 2 | 4 | யென்பாகம் | லென்பரகம் |
| 16 | 9 | 1 | வருள்கொஞ்சமே | நீயேதஞ்சமே |

பரமபதிதுணை.

# நோட்டீஸ்.

இதனடியில்கண்ட புஸ்தகங்களும இன்னம் வேண்டும் இதர ஸ்தகங்களும் தேவையுள்ளவர்கள் இதனடியிற்கண்ட விலாசத்தி கெழுதி வி. பி போஸ்டு மூலமாய்ப் பெற்றுக்கொள்ளலாம் தபால் சு பிரத்தேகம்.

## மாந்திரீகப் புஸ்தக விபரம்.

| | | | |
|---|---|---|---|
| மாலை சக்கரம் மந்திரம் பூஜாவிதியுடன் | 0 | 4 | 0 |
| னுபூதி சக்கரம் மந்திரம் பூஜாவிதியுடன் | 0 | 4 | 0 |
| ா அனுபவ மாந்திரீக சாஸ்திரம சக்கரம் மூலமந் | | | |
| பூஜாவிதியுடன் முதல் பாகம் | 0 | 2 | 0 |
| 2, 3, 4, 5, 6, 7, 8 பாகம் சக்கரம் மூலமந்திர | | | |
| விதியுடன் அநேக அனுபவமுறை அடங்கியது | | | |
| க்கு | 0 | 2 | 0 |
| ஓரே கட்டடம் மாந்திரீக இரத்தினகரம் | | | |
| | 0 | 14 | 0 |
| சடாக்ஷரமாரல் சுப்பிரமணியர் மாந்திரீக சரப | | | |
| ம இரண்டும் சக்கரம் மூலமந்திரம் பூஜாவிதியுடன் | 0 | 2 | 0 |
| ஓட்டியஞ் சல்லிய மாந்திரீகம் | 0 | 2 | 0 |
| கருவூரார் அட்டமாசித்து | 0 | 4 | 0 |
| சுப்பிரமணியர் விஞ்சை | 0 | 1 | 0 |
| அகஸ்தியர் மாந்திரீக காவியம் | 0 | 8 | 0 |
| மணிமந்திர வயித்திய சேகரம் | 1 | 0 | 0 |
| மாந்திரீக தீபம் | 0 | 4 | 0 |
| மாந்திரீக அரிச்சுவடி | 0 | 4 | 0 |
| கண்கட்டி வித்தை | 0 | 6 | 0 |
| ஷை 2, 3, 4 பாகம் பாகம் 1-க்கு விலை | 0 | 6 | 0 |
| பீதாம்பரய்யர் ஜாலம் | 0 | 12 | 0 |
| ஜாலக்கண்ணாடி 10 பாகம் | 0 | 2 | 0 |

## புதிதாய் அச்சிட்ட சோதிட புஸ்தகம்.

| | | | |
|---|---|---|---|
| சங்கராசாரியர் ஆயுட்பாகம் | 1 | 0 | 0 |
| ஷை புத்திர பாகம் | 0 | 12 | 0. |
| ஜாதக திவாகரம் | 0 | 8 | 0 |
| கூபசாஸ்திரம் அதாவது கிணர் வெட்டித் தண்ணீர்காண | | | |
| க்கூடிய சாஸ்திரம் மூலமும் வுரையும் | 0 | 4 | 0 |
| ஜாதக நுட்பம் | 0 | 2 | 0 |

இப்படிக்கு ☞ எஸ். முத்தைய பிள்ளை,
புஸ்தக புதுமண்டபம்